# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

• Volume : 3 • Issue: 9 • November 2016 • Annual Subscription Rs. 100/- • மலர் 3 • இதழ்: 9 • நவம்பர் 2016 • வருடச் சந்தா ரூ. 100/-



என்ன தொழில் செய்வது?

# பகவத் பாதை
தமிழ் மாத இதழ்

## உள்ளே







மனதிருப்திக்கான செயல்களை நம்முடைய பொழுது போக்காக வைத்துக்கொள்ளலாம். ஆனால் அதையே வருவாய் ஈட்டும் தொழிலாகக் கொள்வதென்பது சரியல்ல. வருவாய் உள்ள நல்ல தொழிலைத் தேர்வு செய்து, அதனையே தியானமாக ஈடுபாட்டுடன் செய்து வந்தால் எந்த தொழிலும் வெற்றி பெறும். இதுவே தொழிலைச் செய்திடும் வகையாகும்.

- ஸ்ரீ பகவத்

கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? அல்லது பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?


Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.
**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**
www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com



This Book Designed By:
**PRAKASH PRINTERS, SALEM**
Mobile : 9843786655


## நெரூரில் 3 நாள்
# ஞான முகாம்

வழங்குபவர் : **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்கள்

இடம் : **காஞ்சி சங்கர மட வளாகம், நெரூர் அக்ரஹாரம்.**

நாள் : 25.11.2016 வெள்ளிக்கிழமை மாலை 6:00 மணி முதல்
27.11.2016 ஞாயிற்றுக்கிழமை மாலை 3.00 மணி வரை

ஞான முகாம் கரூரில் இருந்து திருமுக்கூடலூர் செல்லும் வழியில் இருக்கும் காவேரி ஆற்றங்கரையில் அமைந்துள்ள ஆன்மிகத்தில் சிறப்பு வாய்ந்த இடமான ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திரரின் ஜீவ சமாதி வளாகத்திற்கு அருகில் நெரூர் அக்ரஹாரத்தில் அமைந்துள்ள காஞ்சி கங்கர மடத்தில் நடைபெற உள்ளது.

தலைப்புகள் :

**ஞானத் தெளிவு | அகம் புறம் | நான் யார்?**
**நினைவும் சிந்தனையும் | மனோலயம் - மனோ நாசம்**
**கர்ம வினைகள் | ஞானத் தெளிவில் உறுதி**

தங்குமிடம், உணவுக்கான செலவு பகிர்வு நபர் ஒருவருக்கு ரூ. 1000/-

25.11.2016 அன்று அனைவருக்கும் இரவு உணவு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இரவு உணவுக்குப்பின் அறிமுக வகுப்போடு ஞானமுகாம் ஆரம்பிக்கப்பட உள்ளது.

ஆண்கள் தங்குவதற்கும், பெண்கள் தங்குவதற்கும் தனித்தனி இடவசதி உள்ளன.

நமது ஞானமுகாம் எந்த ஆன்மிக அமைப்போடும் முரண்பாடு கொண்டதன்று, எனவே எந்த ஆன்மிக அமைப்பைச் சார்ந்தவர்களாக இருந்தாலும் ஞானத்தேடுதல் கொண்டவர்களாக இருப்பின் இந்த ஞானமுகாமில் கலந்து கொண்டு ஞானத் தெளிவு பெறலாம்.

வழி : கரூரிலிருந்து திருக்கூடலூர் செல்லும் பேருந்தில் பரிசல் துறை என்கிற சதாசிவன் கோயில் பஸ் நிறுத்தத்தில் இறங்க வேண்டும். பஸ்நெ.4 மற்றும் மினிபஸ் வசதி உள்ளது.

கரூர் இரயில் நிலையத்தில் இறங்குபவர்கள் பக்கத்தில் மார்கெட் ஸ்டாப் வரை நடந்து சென்று ஞானமுகாமிற்கு வரலாம்.

ஞானமுகாமில் கலந்துகொள்பவர்கள் பெயரை முன்பதிவு செய்வது அவசியம்.

முன்பதிவுக்கு

திரு. **இராஜகோபால்** 93605 79181
திரு. **சிவகுரு** 94437 56296
திரு. **சுவாமிநாதன்** 99422 89420
திரு. **பாலசுப்ரமணியம்** 97872 53751

அனைவரும் வருக! தெளிவு பெறுக!!




# என்ன தொழில் செய்வது?

"என்ன தொழில் செய்கிறீர்கள்?" என்று சிலரிடம் கேட்கும் போது அவர்கள் இப்படிக் கூறுகிறார்கள்:

"நான் சினிமாவில் நடிப்பதற்கு முயல்கிறேன்."

"நான் சினிமா டைரக்டராக முயல்கிறேன்."

"நான் அக்கு பங்சர் டாக்டராக முயல்கிறேன்."

–இப்படியும் சிலர் கூறுகிறார்கள்.

"ஏன் இதைத் தேர்ந்தெடுத்தீர்கள்?" என்று கேட்டால்,

"எனக்கு இது மிகவும் பிடித்திருக்கிறது" என்று கூறுகிறார்கள்.

நாம் நம் மனதுக்குப் பிடித்தமான வேலையைத் தான் செய்ய வேண்டுமா?

ஆரம்ப நாட்களில் நான் ஜே. கிருஷ்ணமூர்த்தியின் கருத்துகளில் மிகுந்த ஈடுபாடு காட்டுவதுண்டு.

அவரிடம் சிலர் இது சம்பந்தமான கேள்விகளைக் கேட்பார்கள்.

அதற்கு அவர் பின்வரும் தன்மையில் பதில் கொடுப்பதுண்டு.

"ஆர்வத்தைதான் பிரதானமாகக் கருத வேண்டும். ஒருவர் ஓவியம் வரைவதில் ஆர்வம் உள்ளவராக இருந்தால் அவர் அதில் தான் ஈடுபட வேண்டும். அதில்தான் அவர் வருவாய் ஈட்ட வேண்டும். அதில் சொற்ப வருவாய் கூட கிடைக்கலாம். அதை அவர் பொருட்படுத்தக் கூடாது. அவரை நம்பி அவரைச் சார்ந்திருப்பவர்களிடமும் அவர் தனது நிலையைக் கூறிவிட வேண்டும். எவருக்காகவும் தனது ஆர்வத்தை விட்டுக் கொடுக்கக் கூடாது. அதில் தான் அவரால் முழுமை பெற முடியும்."

–இவ்வாறு அவரது விளக்கம் அமைந்திருக்கும்.

ஜே. கே. யின் கருத்துக்கள் பலவற்றையும் நான் ஏற்றுக் கொண்டு அதனை செயல்படுத்துவதில் நான் மிகுந்த அக்கறை கொண்டிருந்தேன். ஆயினும் கூட மேலே குறிப்பிட்ட அவரது கருத்து எந்தக் காலத்திலும் எனக்கு உடன்பட்டதாக இல்லை. அது அன்றும் எனக்குச் சரியாகப் படவில்லை; இன்றும் சரியாகப்படவில்லை.

இப்படித் தான் ஒருவர் ஆங்கில மருந்துகள் விற்பனை செய்யும் மருந்துக் கடை வைத்திருந்தார். அக்கு பங்சர் மருத்துவத்தில் ஆர்வம் ஏற்பட்டு அதனைக் கற்றுக் கொண்டார்.

அதனால் அவருக்கு ஆங்கில மருந்துகளின் மீது வெறுப்பு ஏற்பட்டு விட்டது. மருந்துக் கடை நடத்துவதில் அக்கறை குறைய ஆரம்பித்தது.

அதைத் தொடர்ந்து நடத்தலாமா, வேண்டாமா என நம்மிடம் ஆலோசனை கேட்க ஆரம்பித்தார்.

இது போல் பல் மருத்துவர்கள் இருவர் அக்குபங்சர் கற்றுக் கொண்ட பிறகு பல் மருத்துவம் பார்ப்பதையே குற்றமாகக் கருத ஆரம்பித்து விட்டார்கள். அக்குபங்சர் மருத்துவமே போதும் என எண்ண ஆரம்பித்து விட்டார்கள். அவர்களும் அது பற்றி நம்மிடம் ஆலோசனை கேட்பதுண்டு.

நான் இளைஞனாக இருக்கும் போது கதைகள் எழுதுவதிலும், ஓவியம் வரைவதிலும் ஈடுபாடு காட்டியதுண்டு. கதை எழுதுவது என உட்கார்ந்து விட்டால், நேரம் காலம் தெரியாமல் எழுதிக் கொண்டிருப்பேன். அதனால் எனது பெற்றோர் கூட அதற்கு ஆட்சேபணை தெரிவிப்பதுண்டு.

பெயர் பெற்ற எழுத்தாளனாக வேண்டும் என்ற எண்ணங்கள் கூட எனக்கு இருந்தது. ஆனால் அதனால் ஏற்படும் வருவாயை நம்பி வாழ்க்கையை நடத்துவது என்றோ, அதையே தொழிலாகச் செய்வது என்றோ எந்த எண்ணமும் எனக்குக் கிடையாது.

எழுதுவதன் மூலம், நமக்கும் ஒரு மனத்திருப்தி கிடைக்கிறது; படிப்பவர்களுக்கும் ஒருவித மகிழ்ச்சி கிடைக்கிறது.

இதில் தவறு ஏதாவது இருக்கிறதா?

எந்தத் தவறும் இல்லை.

ஆனால் இதனையே வருவாய் ஈட்டும் வாழ்க்கைத்

தொழிலாக மேற்கொள்ளும் போது தான் நாம் ஆய்வுக்கு எடுத்துக் கொள்வது மிகவும் அவசியமாகிறது.

எங்கள் கிராமத்தில் அரசு நூலகம் இருந்தது. அதில் உள்ள நாவல் நூல்களைப் படிப்பதற்கு எடுப்பதுண்டு. எனது தாயார் விரும்பும் நாவல்களையும் எடுத்து வருவதுண்டு.

எனது தாயார் படித்த நாவல் ஒன்றின் கதாநாயகனாக எழுத்தாளன் ஒருவனே காட்டப்பட்டிருந்தான். அந்த எழுத்தாளன் வருவாய் இல்லாமல் மிகவும் கஷ்டப்பட்டதாக அந்தக் கதையில் விவரிக்கப்பட்டிருந்திருக்கிறது. நான் அந்தக் கதையைப் படித்ததில்லை.

ஆனால் எனது தாயார் அந்தக் கதையைப் படித்ததிலிருந்து, நானும் எழுத்தாளனாகி வருமானம் இல்லாமல் கஷ்டப் பட்டு விடுவேனோ என்று பயப்பட ஆரம்பித்து விட்டார். அதனால் அதுபற்றி என்னிடமும் சில முறை கூறியதுண்டு.

ஆனால் எழுத்தையே தொழிலாகக் கொள்ளும் எந்த எண்ணமும் எனக்கு இல்லாததால் அது பற்றி நான் அவரிடம் எந்த எதிர்வாதமும் செய்யவில்லை.

அதுபோல் ஞானத்துக்காக வீட்டினரைத் துறந்து செல்வதும் எனக்குச் சரியாகப்படவில்லை.

இரமணரிஷி துறவறம் மேற்கெண்டு திருவண்ணாமலையில் இருக்கும் போது அவரை வீட்டுக்கு அழைத்துச் செல்ல அவரது தாயார் பலமுறை முயற்சி செய்தார். ஆனால் இரமணர் ஒவ்வொரு முறையும் அவருடன் செல்வதைப் பிடிவாதமாக மறுத்து விட்டார்.

இது போலவே சேஷாத்திரி சுவாமிகளுடைய வாழ்க்கையிலும், ஆதிசங்கரர் வாழ்க்கையிலும் ஏற்பட்ட சம்பவங்களைப் படிக்கும் போது,

அவர்களுடைய தாயார்கள் மீது தான் எனக்குப் பரிதாப உணர்வு ஏற்படும்.

இரமணர், சேஷாத்திரி சுவாமி, ஆதிசங்கரர் போன்றோர் தங்கள் சுயநலத்துக்காக தங்களது தாயார்களை வருந்தச் செய்துள்ளதாகவே தோன்றும்.

அவர்கள் மீது எனக்குக் கோபம் ஏற்படா விட்டாலும்

அவர்களது அணுகுமுறை எனக்குப் பிடிக்காது.

இத்தகைய பட்டியலில் புத்தர், வள்ளலார், இராகவேந்திரர் எனப் பலரும் இடம் பெற்றுள்ளனர்.

நான் எனது பதினெட்டாவது வயதில் ஆன்மிக உலகினுள் அடி எடுத்து வைத்து விட்டேன். எனது 19, 20ஆவது வயதுகளில் எனது நடை உடை பாவனைகள் மாற ஆரம்பித்து விட்டன. நான் சந்நியாசியாக மாறி விடுவேனோ என்று எனது பெற்றோர் பயந்து விட்டனர். ஆனால் அத்தகைய எண்ணம் எதுவும் எனக்குக் கிடையாது.

எனது பெற்றோர் இவ்வாறு பயந்து விட்ட காரணத்தினாலேயே, நான் சட்டக் கல்லூரியில் இறுதியாண்டு படிக்கும் போதே எனக்குத் திருமணம் செய்து வைத்து விட்டார்கள்.

வாழ்வை, தங்களது இலக்குக்காகவே அர்ப்பணித்துக் கொண்ட இரமணர், புத்தர், வள்ளலார் போன்றவர்கள் வெற்றியடைந்து, வாழ்வில் பிரபலமடைந்துள்ளதையும் நம்மால் மறுக்க முடியாது.

இதே போன்று சிலர் வைத்தியம், ஜோதிடம், இலக்கியம் போன்றவைகளுக்குத் தங்களையே அர்ப்பணித்துக் கொண்டவர்களையும் பார்த்திருக்கிறேன்.

அவர்கள் எப்படி இருக்கிறார்கள்?

வைத்தியத்தை மிகவும் அசாதாரணமாக கையாளுவார்கள். அது போல் ஜோதிடத்தையும் மிகவும் அசாதாரணமாகக் கையாளுவார்கள்.

அவற்றில், அவர்களுக்கு நிகர் அவர்களே என்று கூறும்படியாக இருப்பார்கள்.

அவர்களுக்குக் குடும்பம் அமைந்திருந்தும், குடும்பத்தோடு இருக்க மாட்டார்கள், போதைப் பழக்கங்களுக்கும் அடிமைப் பட்டிருப்பார்கள்.

இது போல் இலக்கியத்தில் ஆர்வம் கொண்ட ஒருவரையும் அறிவேன். அவர் திருக்குறளில் மிகவும் ஈடுபாடு கொண்டவர்.

நாம் என்ன தலைப்பில் கேள்விகள் கேட்டாலும் அதற்கான பதிலை திருக்குறளிலிருந்து எடுத்துக் கொடுப்பார்.

அவரைக் கலாய்க்க வேண்டும் என்ற நோக்கில் சிலர் இடக்கான கேள்விகளைக் கூட அவரிடம் கேட்பதுண்டு. திருக்குறளுக்கும் அந்தக் கேள்விகளுக்கும் எந்தச் சம்பந்தமும் இருக்காது.

ஆனால் அவரோ தனது சாமார்த்தியத்தால் அந்தக் கேள்வியையும் திருக்குறளையும் சம்பந்தப்படுத்தி விடுவார். அந்தக் கேள்விக்காகவே திருக்குறள் அமைக்கப்பட்டதைப் போன்று காட்டிவிடுவார்.

ஆனால் திருக்குறளைத் தவிர வேறு எதுவும் வாழ்வில் முக்கியத்துவமுடையதாக அவருக்குத் தெரியாது.

பொதுக் குழாயில் தண்ணீர் பிடிக்கும் பெண்களுக்கு அவர் திடீரென திருக்குறள் பாடம் எடுக்க ஆரம்பித்து விடுவார். அவர்கள் இவரை சட்டை செய்யாததைக் கூட இவர் சட்டை செய்ய மாட்டார். அவர்களாகக் கூப்பிட்டு இவரைக் கேள்வி கேட்டதைப் போன்று இவர் பலவகையான விளக்கங்களை கொடுப்பார்.

அதனால் இவருக்குப் பண்டிதர் என்ற பெயருக்குப் பதிலாக மெண்டல் என்ற பெயர் தான் நிலவி வந்தது.

இது போல் ஒரு கணினிப் பொறியாளர். நல்ல வருவாய் தரும் வேலையிலிருந்தார். “நான் தேவைக்கு அதிகமாகவே வருவாய் ஈட்டி விட்டேன். எனது வேலை எனக்குக் கஷ்டமாக இருக்கிறது. மகிழ்ச்சியுடனும் மன நிம்மதியுடனும் எனது வேலையை என்னால் செய்ய முடியவில்லை. நானும் எனது துணைவியாரும் பொழுது போக்காக இசைக்கச்சேரிகள் நிகழ்த்துவதுண்டு, அது எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. இந்த வேலையை விட்டு விட்டு இசைக்கலையில் என்னை ஈடுபடுத்திக் கொள்ளலாம் என எண்ணுகிறேன். உங்களுடைய கருத்து என்ன?” என்று நம்மிடம் கேட்டு வந்தார்.

வேலையை விட்டு விட வேண்டாம் என்றே

அவருக்கு ஆலோசனை வழங்கி வந்தோம்.

ஆனால் அவர் அவருடைய கருத்து தான் சரியானது என்ற முடிவிலேயே காலத்தை ஓட்டி வந்தார்.

திடீரென ஒரு நாள் அவரை வேலையை விட்டு நிர்வாகமே நிறுத்தி விட்டது. அவர் மீது குற்றச் சாட்டு எதுவும் கிடையாது. ஆனால் ஊழியர்கள் உபரியாக இருக்கும் காரணத்தினால் ஊழியர்களைக் குறைக்கும் நடவடிக்கையாக இவரையும் நீக்கி விட்டார்கள்.

இவர் மிகவும் மகிழ்வடைந்தார். விரும்பிய வேலையில் ஈடுபடும் வாய்ப்பை இயற்கையே ஏற்படுத்திக் கொடுத்ததாக எண்ணினார்.

இசைத்துறையில் ஈடுபடும் முழுவாய்ப்பு அவருக்கும் கிடைத்தது. அவருடைய மாற்றங்கள் குறித்து விரிவாகக் கேட்டுத் தெரிந்து கொள்ளவில்லை. ஆனால் ஆறுமாதங்களுக்குப் பிறகு அவர் மீண்டும் கணினிப் பொறியாளர் வேலையைத் தேட ஆரம்பித்தார். நேர்முகத் தேர்வுக்காக சென்னையிலிருந்து கல்கத்தா வரை கூட சென்று வந்து விட்டார். வேலைக்காக பல நேர்முகத் தேர்வுகளில் கலந்து கொண்டார்.

தற்போது ஒரு வழியாக நல்ல ஊதியத்தில் மீண்டும் கணினிப் பொறியாளர் வேலையில் சேர்ந்து விட்டார்.

இப்போதெல்லாம் அவர் வேலையை விட்டு விடலாமா என்று ஆலோசனை கேட்பதில்லை.

தொழில் வேறு; பொழுது போக்கு வேறு.

தொழில் என்பது சிரமம் எடுத்துச் செய்ய வேண்டிய ஒன்று, அது மகிழ்ச்சியை ஏற்படுத்தும் என்று வரையறுத்துக் கூற முடியாது.

எனக்குத் தெரிந்த உறவினர் ஒருவர் கடை வைத்து நடத்தி வருகிறார்.

காலை ஒன்பது மணி அளவில் கடையைத் திறந்தாரானால் இரவு 10 மணி வரை கடையிலேயே கல்லாப்பெட்டி அருகிலேயே உட்கார்ந்திருப்பார்.

காலை முதல் இரவு வரை எப்போதும் வாடிக்கையாளர்கள் வருவார்கள் என்று கூற முடியாது. பல நேரங்களில் அவர் தனிமையாகக் கூட இருப்பார்.

சில நேரங்களில் அவரைப் பார்க்கும் போது, கடைக்குள்ளேயே கைதியாக மாட்டிக் கொண்டாரோ என்று கூடத் தோன்றும்.

வருவாய் ஈட்டுவதற்கு சிரமம் மேற்கொள்வது அவசியமானதே. அதே நேரம் பொழுதுபோக்கும் முக்கியமான ஒன்றுதான்.

அங்கீகரிக்கப்பட்ட பொழுது போக்கின் பெயர் தான் கலை ஆகும்.

நமக்கும், பிறருக்கும் மகிழ்ச்சியைக் கொடுக்கும் கலைகளில் ஈடுபாடு காட்டுவதையும் நமது வாழ்வின் ஓர் அங்கமாகக் கொள்ள வேண்டும். அதில் எந்தத் தவறும் கிடையாது. ஆனால் அதையே வருவாய் ஈட்டும் தொழிலாகக் கொள்வதென்பது, அமிர்தத்தை அளவுக்கு மிஞ்சி சாப்பிடுவதே ஆகும். அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சாகி விடும்.

அதற்காக வருவாய் ஈட்ட வேண்டும் என சட்டவிரோதமான தொழில்களில் ஈடுபடுவது சரியன்று. வருவாய் தரும் சட்டபூர்வமான தொழில்களில் ஈடுபடுவது தான் சரியானது.

மன திருப்திக்கான செயல்களை நம்முடைய பொழுது போக்காக வைத்துக் கொள்ளலாம்.

பொழுதுபோக்கையே தொழிலாக மாற்றும் விஷப்பரிட்சையில் எவரும் இறங்க வேண்டாம் என்பது எனது கருத்து.

எங்கேயோ ஒருவர் – பல்லாயிரத்தில் ஒருவர் – கலைத்துறையில் வெற்றி பெற்றிருப்பார். – மனம் ஈடுபாடு கொண்ட தொழிலில் வெற்றி பெற்றிருப்பார். ஆனால் அவை அனைத்தும் நடைமுறை உண்மை அல்ல. அவையாவும் விதிவிலக்கான உண்மைகளே.வருவாய் ஈட்டும் தொழிலையே பிரதானத் தொழிலாக வைத்துக் கொண்டு மனதுக்குப் பிடித்த தொழிலை பொழுது போக்காக நாம் வைத்துக் கொள்ளலாம்.

அதுவே நமக்குத் தேவையான வருவாயை ஈட்டித் தரும் அளவில் உயர்ந்திடும் பட்சத்தில்

அதனையே முழுநேரத் தொழிலாகவும் உயர்த்திக் கொள்ளலாம்.

நம் மனதுக்குப் பிடித்த தொழிலாகவே இருந்தாலும் கூட அங்கேயும் நாம் நம் மனதுக்குப் பிடிக்காத பல செயல்களில் ஈடுபட வேண்டியது ஏற்படும்.

ஏற்காடு மலை என்பது குளிரான சீதோஷ்ணமுள்ள மலையாகும்.

அங்கே தங்கியிருக்கும் திட்டங்களுடன் ஒருவர் தனது நண்பர்களுடன் பைக்கில் புறப்படுகிறார் என வைத்துக் கொள்வோம்.

அவர் புறப்படும் நேரம் நல்ல வெயில். வெயில் காலத்தில் தான் ஏற்காடு, தங்குவதற்கு இனிமையாக இருக்கும். அதை நம்பிதான் அவர் திட்டமிட்டுப் புறப்படுகிறார்.

ஏற்காட்டை அடைந்து விட்டால் மிகவும் ரம்மியமான சூழ்நிலையில் அவரால் இருக்க முடியும்.

ஆனால் பயணத்தின் பாதியில் அவர் மலைப்பாதையில் போக்குவரத்து நெரிசலில் மாட்டிக் கொள்கிறார்.

நல்ல வெயில். முன்னேயும் போகமுடியவில்லை. பின்னாலும் திரும்ப முடியவில்லை. அவர் திட்டமிட்டபடி நடந்திருந்தால் ஏற்காட்டின் குளுமையை அனுபவித்திருக்க முடியும். அதை நோக்கிச் சென்றவர் தான் இப்போது வெயிலின் கொடுமையை அனுபவித்துக் கொண்டிருக்கிறார்.

இப்படி எல்லாவிதமான தொழில்களிலுமே ஏற்ற இறக்கங்கள் உண்டு.

செய்யும் தொழிலையே தியானமாக, ஈடுபாட்டுடன் செய்தால் தான் எந்தத் தொழிலும் வெற்றி பெறும்.

வருவாய் உள்ள நல்ல தொழிலைத் தேர்வு செய்து, அதனையே தியானமாகச் செய்வதே தொழிலைச் செய்திடும் வகையாகும். ★



# கேள்வி? பதில்...

## கள்ளம் கபடம் இல்லாக் குழந்தையும் பொறுப்புள்ள தந்தையும்

V.A.P. சரவணன் (சேலம்)
செல் : 99942 05880

**கேள்வி:**

வாழ்க்கையை நிறைவாக வாழ்வதற்கு மனதையும், புத்தியையும் பயன்படுத்த வேண்டும் என்பதை நன்றாகப் புரிந்து கொண்டேன். புத்தி என்ன தான் நல்லது என்று மனதிற்கு சொன்னாலும் பல நேரங்களில் மனம் கேட்காமல் அதன் போக்கில் தான் செயல்படுகிறது. பிறகு நடந்து முடிந்ததை எண்ணி வருத்தப்படுகிறது. மனதை புறக்கணித்து விட்டு வெறும் புத்தி பூர்வமாக மட்டும் செயல்படும் போது செயல்களில் இணக்கம் இல்லாத இறுக்கமான தன்மையில் அச்செயல் உயிரோட்டம் இல்லாமலும் இருக்கிறது. மனதின் விருப்பப் படி செயல்பட்டால் பல பிரச்சினைகளைச் சந்திக்க வேண்டியது வரும் என்பதும் தெரிகிறது. மனதின் துணையுடன் புத்தி பூர்வமாக எப்படிச் செயல்படுவது? புத்தி பூர்வமான செயலுக்கு மனதை இணைத்துக் கொண்டு எப்படி சிறப்பாகச் செயல்படுவது?

**பதில்:**

நம் வாழ்க்கையை நிறைவாக வாழ்வதற்கு நம்மிடம் உள்ள இரண்டு கருவிகள் தான் மனம், புத்தி ஆகும். நாம் பிரித்து புரிந்து கொள்வதற்காக தான் இரண்டு கருவிகள் என்று கூறுகிறோமே தவிர உண்மையில் இருப்பது ஒரே கருவி தான். அதுவே தான் மனமாகவும் செயல்படுகிறது, அதுவே தான் புத்தியாகவும் செயல்படுகிறது. ஒரு நேரத்தில் செயல்படும் போது ஒன்று மனமாகச் செயல்படும் அல்லது புத்தியாகச் செயல்படும். ஒரே நேரத்தில் மனம், புத்தி என்ற இரண்டு தன்மையிலும் செயல்படாது. மனதின் செயல்பாட்டிற்கும், புத்தியின் செயல்பாட்டிற்கும் இடையில் ஓர் இடைவெளி நிச்சயமாக இருக்கிறது.

பொதுவாக நாம் சந்திக்கும் சூழ்நிலையின் போது முதலில் மனமாகவும் பிறகு புத்தியாகவும் செயல்படும். நாம் சந்திக்கும் சூழ்நிலையின் போது நமக்கு என்ன பிடிக்கும், என்ன பிடிக்காது என்பதை மனதில் பதிந்திருக்கும் பதிவுகளை வெளிப்படுத்தும். பிறகு நாம் புத்தியைப் பயன்படுத்தி நம்முடைய பழைய அனுபவங்களைக் கருத்தில் கொண்டு எது சரியான செயலோ அதை செய்வது தான் சிறப்பு.

நாம் மனதையும், புத்தியையும் எளிமையாக புரிந்து கொள்ள மனதை விளையாட்டுக் குழந்தையாகவும், புத்தியைப் பொறுப்புள்ள தந்தையாவும் நடைமுறை வாழ்க்கையில் பொருத்திப் பார்த்து விளங்கி கொள்வோமாக.

குழந்தைத் தனம் என்பது கள்ளம், கபடம் அற்றது. அதற்கு எது சரி, எது தவறு என்று தெரியாது. நியாயம், தர்மம் எல்லாம் தெரியாது. யாரிடம் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதும் தெரியாது. முழுக்க முழுக்க விளையாட்டுத் தனமாகவும் சுதந்திரமாகவும், துன்றிகமாகவும் இருக்கும். அறிவைப் பற்றி தெரியாது. ஒரு இடத்தில் நில்லாமல் இங்கும் அங்கும் ஓடிக் கொண்டே இருக்கும். அதன் செயல்பாட்டிற்கு எந்தக் காரண காரியமும் இருக்காது. தன்னுடைய செயலைத் தவறு என்று நினைக்காது. நேற்று, இன்று, நாளை என்ற எந்த கணக்கும் கிடையாது. எந்த இடத்திற்கு போனாலும் கொஞ்ச நேரத்தில் அந்த இடத்தில் பொருந்தி விளையாட ஆரம்பித்துவிடும். குழந்தைகளின் அத்தனை செயல்பாட்டினையும் நினைவு கொள்வோமாக. இப்படிச் செயல்படும் தன்மையில் இருப்பது தான் மனம்.

பொறுப்புள்ள தந்தை என்பவர், தான் இதுவரை அறிந்து கொண்ட விசயங்கள், அதனால் தனக்கு ஏற்பட்ட அனுபவங்கள் என அனைத்தையும் ஒரு அறிவுத் தொகுப்பாக வைத்திருப்பார். அதில் நல்லது, கெட்டது, தர்மம், நியாயம், எப்படி நடந்து கொள்ள வேண்டும். எப்படி நடந்து கொள்ளக் கூடாது என அனைத்தும் உண்டு. நேற்று, இன்று, நாளை என அனைத்தையும் கணக்கில் கொண்டு எப்படிச் செயல்பட வேண்டும் என்ற அறிவுடன் செயல்படுவார். சமுதாயத்தில் பொறுப்புள்ள தந்தையின் அத்தனை செயல்களும் பொருந்தும். இப்படிச் செயல்படும் தன்மையில் இருப்பது தான் புத்தி.

“குழந்தையும் தெய்வமும் குணத்தால் ஒன்று. குற்றங்களை மறந்துவிடும் மனத்தால் ஒன்று. ஞானியர்களும், மேதைகளும் சொன்னார் அன்று” என ஒரு பாடல் உண்டு. அது போல் குற்றங்கள் எதையும், குழந்தைகள் மனதில் சுமந்து கொண்டு இருக்காது. இந்த குழந்தையின் மனம் இறைவன் நமக்குக் கொடுத்தது. அதை நாம் குற்றம் சொல்லக் கூடாது. அது நமக்கு நன்மை செய்வதற்காகவே அனைத்தையும் வெளிபடுத்துகிறது. இந்தக் குழந்தையே தான் அறிவு வளர்ச்சி அடைந்து பொறுப்புள்ள தந்தையாக மாறுகிறது. அறிவு வளர்ச்சி அடைவது என்பது, நாம் மற்றவர்களுடன் முரண்படாமல் இணக்கமாக வாழ்வதற்காக நமக்கு நாமே உருவாக்கிக் கொண்ட வழிமுறை ஆகும். இந்த இரண்டு தன்மைகளும் நமக்குள் தான் இருக்கின்றன. அவைகளை எதை எங்கே எப்படிப் பயன்படுத்த வேண்டும் என்ற கலை தான் வாழ்க்கையை சிறப்பாகவும், தெளிவாகவும் நடத்த உதவுகிறது.

நம்முடைய குழந்தையின் செயல்பாடான விளையாட்டையும், அது செய்யும் தவறுகளையும் குறும்புத் தனங்களையும் எப்படிப் பார்க்கிறோம்? குழந்தை அப்படி நடந்து கொள்வதால் நாம் அதை புறக்கணித்து விடுகிறோமா என்ன? குழந்தை என்றால் அப்படித் தானே இருக்கும் என்று அதன் போக்கில் போய் விளையாட்டு காட்டி இப்படிச் செய்யக் கூடாது இப்படித் தான் செய்ய வேண்டும் என்று கூறுகிறோம். நாம் அப்படிக் கூறுவதால் உடனே குழந்தை அதை அப்படியே பின்பற்றும் என்று கூற முடியாது. கொஞ்ச நேரம் கண்டு கொள்ளாமல் அதன் போக்கில் விடும் போது வெகு விரைவாக நம்மிடம் வந்து ஒட்டிக் கொள்ளும்.

இது போல் நமது மனமும் சில நேரங்களில் அதன் வெளிப்பாடுகளைப் பிடிவாதமாக பிடித்துக் கொண்டு, வேண்டும் என்றே தேவையில்லாமல் செயல்படும். நமது பொறுப்புள்ள தன்மையான புத்தி அதை கண்டு கொள்ளாமல் அது அப்படி தான் செயல்படும் என்று அதன் போக்கில் விட்டு விட்டால் போதும். கொஞ்ச நேரத்தில் தானாகவே நமது புத்தியுடன் இணைந்து கொண்டு செயல்படும் தன்மைக்கு மனம் வந்து விடும்.

நமது குழந்தை செய்யும் தவறுகளுக்காக நாம் திட்டுவது, அடிப்பது, போன்ற ஏதோ ஒரு வேலையைச் செய்து விடுகிறோம். அதனால் அந்தக் குழந்தை மேலும் ஆக்ரோசமாக அழுதும், அடம் பிடித்துக் கொண்டு ஆட்டம் கட்டியும், பிறகு அப்படியே கீழே விழுந்து கூட அழுது அடம்பிடிக்கும். பிறகு மேல் மூச்சு, கீழ் மூச்சு வாங்கிக் கொண்டு விம்மி, விம்மி அழுது கொண்டே நம்மையும் அதற்கு தெரிந்த வார்த்தைகளைக் கொண்டு திட்டும். அதை அமைதிப் படுத்துவதற்காக நாம் தான் நம் நிலையிலிருந்து இறங்கி குழந்தையைக் கட்டிப் பிடித்துக் கொண்டு, “அப்பா, தெரியாமல் செய்துவிட்டேன் இனிமேல் இப்படிச் செய்ய மாட்டேன்” என்று கூறும் போது தான் குழந்தை அமைதிக்குத் திரும்பும். அதை தவிர வேறு எந்த வழியும் நமக்கு இல்லை. குழந்தையை மாற்ற முடியாது, ஆனால் நாம் மாறிக் கொள்ளலாம்.

இது போல் நமது புத்தி, மனதின் செயல்பாட்டினை இது சரியல்ல என்று விமர்சனம் செய்வது என்பது குழந்தையைத் திட்டுவதை போன்றது தான். மனம் மேலும் அவ்வாறு நடந்தும் கொள்ளக் கூடாது என மனதிற்கு எதிராக புத்தி செய்யும் அத்தனை பயிற்சி, முயற்சிகளும் குழந்தையை அடிப்பது போன்றது தான். அவ்வாறு செயல்படுவது மனதின் பாதிப்புகளை அதிகரிக்கச் செய்யுமே தவிர நிச்சயமாகப் பாதிப்புகளைக் குறைக்காது. மனதிடம் புத்தி தான் இறங்கி வந்து சரணடைய வேண்டுமே தவிர, வேறு எந்த வழியும் புத்திக்கு இல்லை. அதன் பிறகு தான் மனம் யதார்த்த தன்மைக்கு திரும்பும்.

நடைமுறை வாழ்வில் நடந்த ஒரு நிகழ்ச்சி. கோவிலுக்கு குழந்தைகள் 6 பேரை கூட்டிச் செல்கிறேன். எல்லாக் குழந்தைகளும் கோவிலைச் சுற்றி வருகிறார்கள். அதில் ஒருவன் மட்டும் “என்னால் நடக்க முடியவில்லை, கால் வலிக்கிறது என்னைத் தூக்கிக் கொண்டு செல்” என்கிறான். அவனால் நடக்க முடியும். ஆனால் வேண்டும் என்றே அடம் பிடிக்கிறான். அதற்கு நான் “உன்னை என்னால் தூக்கிக் கொண்டு கோயில் முழுவதும் சுற்ற முடியாது, நீ மெதுவாக நடந்து வா” என்று கூறினேன். அதற்கு “நான் இங்கேயே இருந்து கொள்வேன். நடக்க மாட்டேன், வர மாட்டேன் என்ன செய்வாய்?” என்றான். “சரி நீ வரவில்லை என்றால் நானும் மற்ற குழந்தைகளும் விட்டு விட்டுப் போய் விடுவோம்” என்றேன். நான் நடக்கும் இடத்திற்குக் கொஞ்சம் ஒரு 20 அடி பின்னால் நின்று கொண்டு வராமல் இருந்தான். நான் மற்ற குழந்தைகளிடம் ‘‘அவனை யாரும் திரும்பிப் பார்க்காதீர்கள், நாம் முன்னாடி மெதுவாக போய்க் கொண்டே இருப்போம், அவன் நம் பின்னால் கண்டிப்பாக வருவான், நாம் கொஞ்சம் பொறுமையாக இருக்க வேண்டும்’’ என்று கூறி நடந்தேன். நானும் மற்ற குழந்தைகளும் ஒரு 20 அடி அவனுக்கு முன்னால் சென்று கொண்டு இருக்கிறோம். எங்களைப் பின் தொடர்ந்து 20 அடியில் பின்னால் அவன் வந்து கொண்டே இருக்கிறான்.

நான் மீண்டும் மற்ற குழந்தைகளிடம் “கொஞ்சமும் அவனைக் கவனிக்காதீர்கள், கொஞ்ச நேரத்தில் அவன் நம்மிடம் வந்து சேர்ந்து விடுவான்” என்றேன். கோயிலைச் சுற்றி வருவதற்குள்ளாக 20 அடி இடைவெளி 15,10,5 என குறைந்து இறுதியாக எனக்கு அருகில் வந்து நின்று கொண்டான். நான் அப்படி எதுமே நடக்காதது போல் அவன் கைகளைப் பிடித்துக் கொண்டு கோயிலுக்கு வெளியில் வந்தேன். நான் அவனிடம் “ஏன் அவ்வாறு அடம் பிடித்தாய்?” என்று எதுவும் கேட்கவில்லை. கொஞ்ச நேரம் அவர்கள் போக்கில் விட்டு விட்டால் பிறகு அவர்களே தானாக நம்மிடம் வந்து சேர்ந்து விடுவார்கள். நமக்கு அருகில் வந்த பிறகு நாமும் அவர்களுக்கு கை கொடுத்து சேர்த்துக் கொள்ள வேண்டும். நாம் இந்த நிகழ்ச்சியை கூறி அந்தக் குழந்தையை அசிங்கப்படுத்தாமல் இருந்தால் மட்டும் போதும்.

இப்படித் தான் நமது மனமும் சில நேரங்களில் முரண்டு பிடிக்கும். அப்படி முரண்டு பிடிக்கும் போது அது குழந்தைத் தன்மையில் செயல்படுகிறது என்று எடுத்துக்கொள்ள வேண்டும். மனதை சரி செய்ய எதுவும் செய்யாமல் அதை சுதந்திரமாக அதன் போக்கில் செயல் பட அனுமதிக்கும் போது வெகு விரைவாக தன்னுடைய பிடிவாதத்தை விட்டு விட்டு யதார்த்த தன்மைக்கு வந்து விடும். யதார்த்த தன்மைக்கு வந்த பிறகு பழைய முரண்பாடுகள், பிடிவாதங்களை நமது புத்தியைக் கொண்டு கிளறாமல் விட்டு விட்டால் போதும்.

குழந்தைகளை நாம் புரிந்து கொள்வதால் தான் அது எப்படி இருக்கிறதோ அதை அப்படியே ஏற்றுக் கொள்கிறோம். அப்படியே ஏற்றுக் கொள்ளும் போது தான் அது நம்மைத் திட்டுவதையும் அடிப்பதையும் கூட விளையாட்டாகவும் மகிழ்ச்சியாகவும் ரசிக்கக் கூடிய ஒன்றாகவும் நாம் எடுத்துக் கொள்கிறோம். குழந்தைகளுக்கு முழு சுதந்திரம் கொடுத்துச் செயல் பட விட்டுப் பாருங்கள் அவர்கள் உங்களின் அருகாமையைத் தான் எப்போதும் தேடுவார்கள். நமக்காக நமது அப்பா எதுவும் செய்வார் என்று எண்ணுவார்கள். அப்படி நாம் அவர்களுக்குச் சுதந்திரம் கொடுக்கும் போது தான் நாம் அவர்களுக்குக் கொடுக்கும் வேலையைக் கூட கொஞ்சம் கொஞ்சமாக செய்ய வருவார்கள். பிறகு நீங்கள் கூறும் அனைத்தையும் கேட்க தொடங்குவார்கள்.

இது போல் நமது மனதின் செயல்பாட்டை முழுமையாக நமது புத்தி புரிந்து கொள்ளும் போது மனம் செய்யும் அத்தனை வேலைகளையும் ரசிக்க தொடங்கி விடுவோம். மனதின் செயல்பாட்டினைப் புரிந்து கொண்டு மனதிற்கு முழு சுதந்திரம் புத்தி வழங்கும் போது புத்தியின் செயல்பாட்டிற்கு மனம் துணையாக இருந்து செயல்படும்.

மனதிற்கு எதிராகப் புத்தி செயல்பட்டு ஒரு போதும் மனதை அமைதிக்குக் கொண்டு வர முடியாது. மனதின் செயல்பாடுகளைப் புத்தி புரிந்து கொண்டு மனத்தின் இயக்கத்தில் குறுக்கிடாத போது மனம் வெகு விரைவாக சமநிலை அடையும். மனம் சமநிலைக்கு வந்த பிறகு

புத்தியின் செயலுக்கு உதவும், துணை நிற்கும். நடைமுறை வாழ்வில் எப்போதும் அதிகமாக இருப்பது மனதின் செயல்பாடுதான். புத்தியின் செயல்பாடு நாம் மற்றவர்களோடு தொடர்பு கொள்ள போது மட்டுமே இருக்கும். புத்தியின் செயல்பாடு உலக விசங்களில் ஈடுபடத் தான் தேவைபடுகிறது. புத்தியின் செயல்பாடு மனதின் யதார்த்த செயல்பாடோடு ஒப்பிடும் போது மிகவும் குறைவான ஒன்று தான். **புத்தியின் செயல்பாடு வெளி காரியங்களுக்கு தானே தவிர மனதின் செயல்பாட்டில் குறுக்கிடுவதற்காக இல்லை என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும்.** புத்தி மனதின் இயக்கத்தில் குறுக்கிடாத போது மனம் சமநிலையுடன் இயற்கையாக இருப்பதோடு புத்திக்கு எப்போதும் துணையும், உதவியுமே செய்யும்.

**மனதின் செயல்பாட்டில் புத்தி குறுக்கிடாத போது புத்தியின் செயலுக்கு மனம் துணை நிற்கும்.**






அனைவருக்கும் சகப் பயணியின் வணக்கம்,

பகவத் பாதையில் பயணிக்கும் பலர், பாதையில் வரும் ஐயாவின் கட்டுரைகள், கேள்வி பதில்கள் மற்றும் ஜென் கதைகள் என அனைத்தும் ஞானத்தைப் புரிந்துகொள்ள பல வகைகளிலும் உதவிபுரிவதாக தங்களது மகிழ்ச்சியைத் தெரிவித்து நன்றி கூறுகின்றனர்.

இந்த ஞானத் தெளிவை தமிழ் தெரியாத மற்றவர்களுக்கும் கொடுக்க வேண்டும் என்ற நோக்கத்தில் நமது பகவத் பாதை மாத இதழை பொது மொழியான ஆங்கிலத்தில் Bagavath Path என்ற பெயரில் சென்ற அக்டோபர் மாதத்தில் முதல் இதழை வெளியிட்டுள்ளோம் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறோம். இதனை அச்சிடாமல் Soft Copy ஆக மட்டும் PDF File ஆக வெளியிட்டுள்ளோம்.

இந்த Bagavath Path மாத இதழ் Whatsapp Group மற்றும் email மூலமாக அனுப்பியுள்ளோம். தேவைப்படுவோர் கேட்டு email மூலமாகப் பெற்றுக் கொள்ளலாம். இதனை Soft Copy ஆக வெளியிடுவதால் இதற்கு சந்தா எதுவும் செலுத்தத் தேவையில்லை.

இந்த ஆங்கில மாத இதழை மொழி மாற்றம் செய்து கொடுத்த சென்னை திரு. **முரளி** & திருமதி.**பிரபா** தம்பதியினர், திருமதி. **முத்து லட்சுமி சரவணன்,** பெங்களூர் திரு. **பாபுலால்** மற்றும் சென்னை திரு. **முருகவேல்** ஆகிய அனைவருக்கும் ஸ்ரீபகவத் மிஷன் சார்பில் பாராட்டுகளையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

மேலும் நமது பகவத் பாதை தமிழ், ஆங்கிலம் என இரு மொழிகளில் வெளி வருவதைப் போல ஒலி (ஆடியோ) வடிவில் ஒலிப் பாதையாகவும் சென்ற அக்டோபர் மாதம் 15ஆம் தேதி ஸ்ரீ பகவத் ஐயா அவர்களால் வெளியிடப்பட்டுள்ளது. இது நமது ஸ்ரீ பகவத் மிஷன் அன்பர்கள் மத்தியில் நல்ல வரவேற்பைப் பெற்று இருக்கிறது. பலரும் நம்மிடம் தொடர்பு கொண்டு "ஒலிப் பாதை மிகவும் பயனுள்ள வகையில் இருப்பதாகவும் பொருத்தமான பின்னணி இசையோடு இருப்பதால் கேட்பதற்கு மிக அருமையாகவும் கருத்துகளை உள்வாங்குவது மிக எளிதாக உள்ளதாகவும் இருக்கிறது" என்று தங்களது மகிழ்ச்சியைத் தெரிவித்தனர். இதனை தனது பலப் பணிகளுக்கு இடையில் பெரும் முயற்சி எடுத்து உருவாக்கி அழகுபடுத்திக் கொடுத்ததோடு இனி ஒவ்வொரு மாதமும் பகவத் பாதையை இதைவிட அருமையான ஒலிப்பாதையாக கொடுக்கும் பொறுப்பினையும் ஏற்றிருக்கும் சேலம் திரு.**இரவிசங்கர்** அவர்களுக்கு நம் அனைவரின் சார்பில் நன்றிகளையும் பாராட்டுகளையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

மேலும் நமது பகவத் ஐயா அவர்களின் ஞானக் கட்டுரைத் தொடர் "மனம் போல் வாழ்வு" என்ற பெயரில் மல்லிகைப் பிரசுரமான "மல்லிகை மகள்" என்ற மாத இதழில் நவம்பர் மாதத்தில் இருந்து வெளிவந்துள்ளது.

இதை அனைவரும் வாங்கிப் படித்து பயன் பெறுவதோடு, தங்கள் நண்பர்களுக்கும் தெரிவித்து அவர்களும் பயன் பெற உதவுமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம். நமது ஐயாவின் கட்டுரை தொடர் மல்லிகை மகள் மாத இதழில் வெளிவர உதவிய ஹீலர் உமர்பாரூக் அவர்களை ஸ்ரீ பகவத் மிஷன் சார்பில் பாராட்டி மகிழ்கிறோம்.

இப்படிப் பல வழிகளிலும் பற்பல பரிமாணங்களிலும் ஐயாவின் ஞானக் கருத்து அனைவரையும் சென்றடைய வேண்டும் என்பதே நமது பயணத்தின் நோக்கம்.

மேலும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் சென்ற அக்டோபர் மாதம் 14ஆம் தேதியிலிருந்து 24ஆம் தேதி வரை சேலம் ஸ்ரீ பகவத் பவனில் தங்கியிருந்தார்கள். அது சமயம் பலரும் ஐயாவைச் சந்தித்து உரையாடி தெளிவு பெற்றுச் சென்றனர். இது போலவே நெரூர் ஞானமுகாமைத் தொடர்ந்து நவம்பர் மாதம் 28ஆம் தேதியில் இருந்து ஸ்ரீ பகவத் பவனில் ஐயா அவர்கள் தொடர்ந்து தங்கவுள்ளார்கள். ஐயாவை நேரடியாக சந்தித்து உரையாடித் தெளிவு பெற இது சரியான வாய்ப்பு. இந்த வாய்ப்பினை தாங்களும் பயன்படுத்தித் தகுதியான உங்கள் நண்பர்களுக்கும் தெரிவித்து பயன்பெறுமாறு செய்ய வேண்டுகிறோம்.



# ஸ்ரீ பகவத் பவனில் 2 நாள் ஞான முகாம்



நாள்: 30-12-2016 வெள்ளிக்கிழமை மாலை 5.00 மணி முதல்
01-01-2017 ஞாயிற்றுக்கிழமை மதியம் 3.00 மணி வரை

இடம்: **ஸ்ரீ பகவத் பவன்,** ஜருகு மலை, கொடம்பக்காடு,
பெரியக்கவுண்டாபுரம், சேலம்.




- ஸ்ரீ பகவத் ஐயாவின் 2 நாள் ஞானமுகாம் சேலத்தில் உள்ள ஸ்ரீ பகவத் பவனில் நடைபெற உள்ளது
- ஆண்களுக்கும், பெண்களுக்கும் தனித்தனி தங்கும் வசதி உள்ளது.
- நன்கொடைகள் வரவேற்கப்படுகின்றன.
- அனைவரும் கலந்து பயன்பெற அழைக்கிறோம். முன்ஏற்பாடு செய்வதற்கு முன்பதிவு அவசியம்.
- முன்பதிவுக்கு இறுதிநாள் 10.12.2016 ( 100 நபர்கள் மட்டும் கலந்து கொள்ள வாய்ப்புள்ளதால் முன்பதிவு செய்தவர்கள் இறுதிநேரத்தில் வர வாய்ப்பில்லை என்றால் அதனை உடனடியாக தெரிவிக்க வேண்டுகிறோம். இது மற்றவர்களுக்குக் கலந்து கொள்ள வாய்ப்பளிக்க வசதியாக இருக்கும்).

**முன்பதிவிற்கு**

உங்கள் பெயர், ஊர், செல் நெம்பரோடு சேலம் ஞானமுகாம் என 9994205880 (அ) 9789165555 என்ற எண்ணுக்கு SMS செய்யவும்.

மேலும் விபரங்களுக்கு

திரு. Dr. **கைலாசம் : 94432 90559** திரு. **சரவணன் : 99942 05880**
திரு. **சதானந்தம் : 77082 74444** திரு. **ஜீவமணி : 9789 1 65555**

## அறிவிப்பு

அனைவருக்கும் வணக்கம்,

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் புகைப்படங்கள் அனைத்தையும் தற்போதிலிருந்து சேகரிக்கத் தொடங்கியுள்ளோம். பல நிகழ்ச்சிகளில், பல சந்தர்பங்களில் நீங்கள் ஐயாவை போட்டோ எடுத்திருக்கலாம், மேலும் இனி எடுக்கலாம். இவை அனைத்தையும் தேதி, இடம் சூழல் போன்ற குறிப்புகளோடு பின்வரும் இ-மெயிலுக்கு அனுப்பி வைக்குமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம். **email : sribagavathmission@gmail.com**

## பகவத் பாதை சந்தா விபரம்

பகவத் பாதை மாத இதழுக்கு சந்தா செலுத்தாதவர்கள், அல்லது புதுப்பிக்காதவர்கள் கீழ்க்கண்ட ஏதேனும் ஒரு வகையில் சந்தா செலுத்துமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம். சந்தா செலுத்த விரும்புபவர்கள் கீழ்க்காணும் ஏதேனும் ஒரு வழியில் செலுத்தலாம்.

**ஓர் ஆண்டு சந்தா –ரூ.100/–** **ஐந்தாண்டு சந்தா – ரூ. 500/–** **ஆயுள் சந்தா – ரூ, 1000/–**

சந்தாத் தொகையை **"Sri Bagavath Mission"** என்ற பெயரில் M.O. அல்லது சேலத்தில் செல்லத் தக்க D.D. (or) Cheque மூலம் அனுப்பலாம்.

**www.pravaagam.org** என்ற இணைய தளத்தில் Credit Card / Debit Card மூலமாகவும் சந்தா செலுத்தலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் HDFC Bank- Sri Bagavath Mission

A/c No. 15907620000075, NEFT IFSC: HDFC 0001590 என்ற கணக்கில் செலுத்தலாம்.

Bank A/C ல் நேரடியாக செலுத்தியவர்கள் உங்கள் முகவரியை 94875 11171 என்ற எண்ணிற்கு SMS மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.



# ஸ்ரீ பகவத் பவன் நிகழ்ச்சி நிழல்கள்



ஸ்ரீ பகவத் பவனில் ஐயாவுடன் அன்பர்கள் உரையாடலின் போது



பகவத் பாதையை ஒலிப் பாதையாக (ஆடியோ புக்) ஐயா வெளியிடும் போது



மாலை நேர மலையேற்றத்திற்குப் பின் ஓய்வு



மரத்தடியில் தளர்வாக அமர்ந்திருக்கும் போது

# கவலைகள் அனைத்திற்கும் தீர்வு




அன்பிற்கினிய ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்,

ஸ்ரீ பகவத் ஐயாவின் நூலான **"கவலைகள் அனைத்திற்கும் தீர்வு"** எனும் நூலின் நான்காம் பதிப்பு தற்போது வெளி வர உள்ளது. இந்த நூல் தேடுதல் கொண்ட அனைவருக்கும் ஞானத் தெளிவைக் கொடுக்கும் வகையில் அமைந்துள்ளதோடு ஆன்மிக சாராத அன்பர்களுக்கும் மனோ தத்துவரீதியாக விளக்கங்களை கொடுத்து அவர்களும் பயன் பெறும் வகையில் அமைந்துள்ளது. ஸ்ரீ பகவத் ஐயா இந்த நூலில் ஞானத்தை அறிவியலாக்கி அனைவரும் புரிந்து கொள்ளும் வகையில் எளிமையாக்கி கொடுத்திருக்கிறார். ஆதலால் இந்த நூலுக்கு கல்வித் துறையில் பாட நூலாக அமையும் தகுதியும் உண்டு. இந்நூல் பாட நூலாக அமைகிறதோ இல்லையோ, தமிழ் படிக்கத் தெரிந்த அனைவரின் கைகளுக்கும் கொண்டு சேர்ப்பதே நம் அனைவரது கடமை. இந்நூலைப் படிப்பவர்கள் அனைவரும் அவர்களது மனக் கவலைகளில் இருந்து விடுபட்டு ஞானத் தெளிவு பெறுவது உறுதி. இந்நூலை இதுவரை ரூபாய் 100/-க்கு விற்பனை செய்து வந்தோம். இந்நூல் அனைவரையும் சென்றடைய வேண்டும் என்ற நோக்கத்தில் நன்கொடை விலையாக **(Gift Price Edition) ரூபாய். 50/-க்கு** வெளியிட வேண்டும் என்ற **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்களின் விருப்பத்திற்கு இணங்க **5000 பிரதிகள்** அச்சிட்டு குறைந்த விலையில் வெளியிட எண்ணியுள்ளோம். இந்நூலின் ஆங்கில வடிவான **"Smash Your Sorrows"** நூலையும் பலரின் பங்களிப்பால் **"Gift Price Edition"** ஆக **ரூபாய் 50/-க்கு** அச்சடித்த மதிப்பை விட குறைந்த விலைக்கு வெளியிட்டுள்ளோம். அதுபோலவே,

இந்நூலையும் குறைந்த விலையில் வெளியிட விரும்புகிறோம். வாய்ப்புள்ளவர்கள் நன்கொடை வழங்கி உதவுமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம். இதுவரை நன்கொடை வழங்கியவர்கள்.

1. திரு. **கார்த்திகேயன்,** சிங்கப்பூர், ரூ. 10000/-
2. திருமதி. **முத்துலட்சுமி சரவணன்,** சென்னை, ரூ. 10000/-
3. திரு. **சதானாந்தா** - திருமதி. **மா சதானந்தா** தி.கோடு, ரூ. 25000/-
4. திருமதி. **சகுந்தலா,** பாடி, ரூ. 5000/-
5. திரு. **சிவக்குமார்,** வலசரவாக்கம், ரூ. 10000/-
6. திருமதி. **நிருபமா,** கோபாலபுரம், ரூ. 10000/-
7. திரு. **பாண்டி பரமசிவம்,** கேப் மின்ஸ் குரூப், சென்னை, ரூ. 10000/-
8. திரு. **ஜெயராம்,** கனடா, ரூ. 10000/-
9. திரு. **முரளிகண்ணன்,** கோவை, ரூ. 10000/-
10. திரு. **மூர்த்தி** குரு ஊறுகாய், நெல்லை, ரூ. 10000/-
11. திரு. **குணாலன்,** கோவை, ரூ. 10000/-
12. திரு. **மாரிமுத்து,** சென்னை, ரூ. 10000/-
13. திருமதி. **தேவி,** மலேசியா, ரூ. 10000/-
14. திருமதி. **ஹேமா கண்ணன்,** USA, ரூ. 10000/-

இவர்களுக்கு ஸ்ரீ பகவத் மிஷன் சார்பில் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். இந்நூல் வெளியிட ரூ. 10000/- வீதம் நன்கொடை வழங்க மேலும் **11 அன்பர்கள் தேவைப்படுகிறார்கள்.**

நன்கொடையாளர்களின் பெயர்களை **"இந்நூல் வெளியிட உதவிய நன்கொடையாளர்கள்"** என இந்நூலில் அறிவிப்பதை பெருமையாகக் கருதுகிறோம். எனவே வாய்ப்புள்ளவர்கள் இந்நூல் வெளியிட தங்களது மேலான நன்கொடைகளை வழங்கி உதவிடுமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

**மேலும் விபரங்களுக்கு : 99942 05880, 97891 65555**




# ஜென் கதை

## இரவலும், சொந்தமும்

ஞானத் தேடல் கொண்ட ஒருவன் தன்னுடைய குடும்ப வாழ்க்கையையே புறக்கணித்து விட்டு ஆசிரமம் ஒன்றில் தங்கி, அங்கு சேவை செய்து கொண்டு ஞானத்தை எப்படியும் அடைந்து விட வேண்டும் என்று முழு மூச்சுடன் ஈடுபட்டு வந்தான். பல ஆண்டுகளாக ஆசிரமத்தில் தங்கியிருந்து தேடியதின் விளைவாக பல தத்துவங்கள், சத்தியங்கள், பயிற்சிகள், முயற்சிகள் என பலவற்றையும் தெரிந்து கொண்டான்.

ஆசிரமத்திற்கு வரும் புதிய ஆன்மிக அன்பர்களுக்கு ஆன்மிகக் கருத்துகளை ஆணித்தரமாக எடுத்து கூறும் வல்லமை அவனுக்கு இருந்தது. பலரும் அவன் எடுத்து கூறுவதை ரசிக்கத் தொடங்கினார்கள். இதனால் நாம் தெரிந்து கொள்ள வேண்டியதைத் தெரிந்து கொண்டதாக நினைத்துக் கொண்டான். ஆனால் உண்மையான தேடுதல் கொண்ட சிலர் கேட்கும் ஆழமான கேள்விக்கு இவனுக்கு விடை தெரியவில்லை என்றாலும் கூட தான் கற்ற தத்துவங்கள் எதோ ஒன்றை எடுத்துக் கூறி, "நீங்கள் இப்படிச் செயல்படுங்கள்" என்று கூறி சமாளிப்பான். ஆனாலும் அவன் பதில் அவனுக்கே திருப்தி அளிக்கவில்லை.

எனவே தான் இன்னும் தெரிந்து கொள்ள வேண்டிய ஓர் உண்மை இருப்பதாக உணர்ந்தான். பக்கத்தூரில் ஓர் ஞானி எளிமையாக வாழ்ந்து வருவதாகவும் அவரைச் சந்தித்து உரையாடி பலரும் ஞானத் தெளிவு எளிதாகப் பெற்று வருவதாகவும் கேள்விப்பட்டான். அவரை சந்தித்து உரையாடி தெளிவு பெற எண்ணினான், ஆனாலும் தான் பலவற்றையும் கற்றவன் என்ற கர்வம் அவரை சந்திக்கத் தடுத்தது.

நீண்ட நாட்களுக்குப் பிறகு வேறு வழியின்றி அந்த ஞானியைச் சந்தித்தான். வந்தவன், தான் இதுவரை சேகரித்த அத்தனை ஆன்மிக தகவல்களையும் கூறி

"நீங்கள் இதைத் தானே மற்றவர்களுக்கு தத்துவமாகவும் விளக்கமாகவும் சொற்பொழிவாகவும் கூறி வருகிறீர்கள்? இது சரிதானே" என்று ஒவ்வொன்றாக கேட்டுக் கொண்டே இருந்தான். ஞானி எதுவும் பேசாமல், முகத்தில் சிறு அசைவுமின்றி, கண்களில் எந்த சலனமும் இன்றி இவன் பேசுவதற்கு முழு சுதந்திரம் மட்டுமே கொடுத்தார். இவன் நீண்ட நேரம் பேசிய பிறகு மீண்டும் நான் கூறுவது சரிதானே என்றான். ஞானி அமைதியை மட்டுமே பதிலாக கொடுத்தார். "வெகு நேரமாகிவிட்டது இன்னொரு முறை உங்களைச் சந்திக்கிறேன்'' என்று கூறிச் சென்றுவிட்டான்.

ஆசிரமத்திற்குத் திரும்பி சென்று அன்றைய கலந்துரையாடலை நிதானமாக யோசித்தான். "நான் மட்டும் தானே பேசிக்கொண்டு இருந்தேன். அவர் எதுவுமே பேசவில்லை. அவர் பேசுவதற்கு நான் எந்த வகையிலும் வாய்ப்பே கொடுக்கவில்லையே. அவர் பேசுவதற்கு முன்பாகவே நான் எனக்கு தெரிந்தவற்றை எல்லாம் எடுத்து பேசி அவரை பேச விடமால் தடுத்து விட்டேனே." என்று எண்ணி வெட்கப்பட்டான். தன்னுடைய கேள்விகளுக்கு எந்த விடையையும் அவரிடமிருந்து பெறவில்லை என்பதைப் புரிந்து கொண்டான். ஞானியின் நிதானமும், அமைதியும் இவனுக்கு மிகுந்த குற்றவுணர்ச்சியை கொடுத்தது.

அடுத்த முறை அவரைச் சந்திக்கச் சென்றான். அவரிடம் எந்த மாற்றமும் இல்லை. அவரின் மேல் ஓர் மதிப்பும், மரியாதையும் இவனை அறியாமல் ஏற்பட்டது. சிறிது நேரம் மிகுந்த அமைதியுடனும், மௌனத்துடனும் கடந்தது. இவனால் அவரின் மௌனத்தைத் தாங்க முடியாமல், "நான் முன்பு உங்களை சந்திக்கும் போது கொஞ்சமும் நிதானமின்றி நடந்து கொண்டதற்கு என்னை மன்னிக்கவும்" என்றான்.

"உங்களை மீறி நடந்த ஒன்றுக்காக வருத்தப்பட தேவையில்லை" என்றார் ஞானி.

"நான் ஏன் அவ்வாறு நடந்து கொண்டேன்? எனக்கு தெரியவில்லை, அது ஏன்?" என்றான்.

"நீங்கள் பதற்றத்திலிருந்து நிதானத்திற்கு வந்த பிறகு தான் நீங்கள் நடந்து கொண்டது சரியல்ல என்பது உங்களுக்கே தெரிகிறது. அதனால் தான் இப்போது இங்கு வந்திருக்கிறீர்கள்" என்றார் ஞானி.

"நான் எல்லா தியானங்களையும் கற்றவன் எல்லாத் தத்துவங்களையும் தெரிந்து கொண்டவன். ஆனால் ஞானம் அடைந்ததாகத் தெரியவில்லை. அதற்கு நான் இன்னும் என்ன தெரிந்து கொள்ள வேண்டும்?" என்றான்.

"தெரியாததை தெரியாது என்று ஏற்றுக் கொண்டு, ஞானம் என்றால் என்ன என்பதைப் புரிந்து கொண்டால் மட்டும் போதும்" என்றார் ஞானி.

"என் காலம் முழுவதும் ஆன்மிகத்திற்காக தானே ஒதுக்கினேன். இருந்தும் புரியவில்லையே அது ஏன்?" என்றான்.

"நீ கற்றவை அனைத்தும் மற்றவர்களிடம் இருந்து இரவல் வாங்கியது தானே தவிர, அது உனக்கு சொந்தமானது அல்ல, அவைகள் ஒரு போதும் உனக்கு உதவிடாது. உன் மனதின் இயலாமையை நீயாகப் புரிந்து கொண்டால் தான் மனதின் கட்டுகளிலிருந்து நீ விடுதலை அடைய முடியும். நீ புரிந்து கொள்வது தான் உனக்கு உதவி புரியும், அப்போது தான் அது உன்னுடைய ஞானமாக இருக்கும். உன்னுடையதை நீ எதுவும் ஞாபகம் வைத்துக் கொள்ளத் தேவையில்லை. அது எப்போதும் உன்னுடன் சாஸ்துவமாக இருப்பது தான். அதை நீ யாருக்க் வேண்டும் என்றாலும் அவர்களுக்குப் புரியும் வண்ணம் எடுத்து கூறலாம்," என்றார் ஞானி.

"மனதின் இயலாமை என்று எதை கூறுகிறீர்கள்?" என்றான்.

"மனம் நமக்குக் கட்டுப்பட்டது கிடையாது, அது முற்றிலும் சுதந்திரமானது, இயற்கையானது. அப்படி கட்டுப்படாத மனதை நம்முடைய கட்டுக்குள் கொண்டு வர முயற்சி செய்து நாம் அடையும் தோல்வியைத் தான் மனதின் இயலாமை என்று கூறுகிறேன்" என்றார் ஞானி.

"அப்படி என்றால் நான் எல்லாவற்றையும் ஏற்றுக் கொள்ள வேண்டுமா?" என்றான்.

"நீ ஏற்றுக் கொண்டால் தான் என்ன? ஏற்றுக் கொள்ளாவிட்டால் தான் என்ன? மனம் எப்படியும் அதன் இயக்கத்தின் படி, சுதந்திரமாகத் தான் செயல்படும். மனதின் இந்த இயக்க உண்மையை நீ புரிந்து கொண்டால் மட்டுமே நீ உன்னுடைய மனதுடன் முரண்பட மாட்டாய். உன் மனதுடன் முரண்படாமல் இருப்பதால் மனம் எப்படி இருக்கிறதோ அப்படியே அதை ஏற்றுக் கொள்வாய்.

"அப்படி என்றால் மனதின் கட்டுக்களிலிருந்து எப்படி விடுபடுவது?" என்றான்.

**"மனதின் சுதந்திரமான இயக்கத்தை நீ புரிந்து கொண்டு மனதிற்கு சுதந்திரம் கொடுத்து செயல்பட விட்டு விட்டால் மனமே உனக்கு விடுதலை கொடுத்து விடும். இப்படி மனம் சுந்திரமாக செயல்பட விடும் போது தான் அதன் கட்டுக்களிலிருந்து விடுபடுவாய் இதுவே விடுதலை – முக்தி"** என்றார் ஞானி.

உள்ளம் உருகியது, கண்ணீர் பெருகியது, அவனுடைய மனதின் எல்லா கதவுகளும் திறந்தன. மடை திறந்த பிரவாக வெள்ளத்தில் கரைந்து போனான். ஞானியின் பாதங்களில் சரண் அடைந்தான்.



Registration Number of the News Paper TNTAM/2014/57698 Postal Registration Number : TN/WR/SLM(E)/22/2015-2017

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555